உ

சிவமயம்.



ஸ்ரீ ஞானவாசிட்ட அந்தர்கதமான

# உத்தாலகருபசாந்தி

மூலமும்,

அம்பாசமுத்திரம்,

ஸ்ரீலஸ்ரீ. ஆத்துமாநந்த சுவாமிகள்

இயற்றிய

திருவருள் விளக்கத் தெளிவுரையும்.

---

1945.

உ

சிவமயம்.

ஸ்ரீ ஞானவாசிட்ட அந்தர்கதமான

# உத்தாலகருபசாந்தி

மூலமும்,

அம்பாசமுத்திரம்,

ஸ்ரீலஸ்ரீ. ஆத்துமாநந்த சுவாமிகள்

இயற்றிய

திருவருள் விளக்கத் தெளிவுரையும்,

---

இவை.

திருவண்ணாமலை, ஈசானியமடம்,

ஸ்ரீமது. நடேச சுவாமிகளால்,

பார்வையிடப்பெற்று.

---

அம்பாசமுத்திரம். அரு. நடராஜ முதலியார்,

பொருளுதவியால்.

தென்காசி, ஸ்ரீராமாநுஜம் பிரஸில்,

பதிப்பிக்கப்பெற்றது.

உ

சிவமயம்.

# ஸ்ரீலஸ்ரீ. ஆத்துமாநந்த சுவாமிகள் வரலாறு.

## கலி வெண்பா.

அடியார்குழாத்துளொருவர் பாடியது.

போதா லயத்தோனும் புள்ளார் கொடியோனு
நாதாந்தத் தேயிருக்கு நாதனுமாஞ்—சோதியே
யாயிரத்து முப்பத்தைந் தாண்டிற்சித் தாத்திரியிற்
றேய்மார் கழியிற் றுவாதசியி—லேயிருபான்
மூன்றுகுரு ரோகிணியின் முற்பக்கங் கௌலவந்
தோன்றிய யோகஞ் சுபம்புவிக்குச்—சான்றுங்
கதிரோன் மறையக் கடிகையைந்தே வீசம்
வதிமிதுன மெல்லோரை வாய்த்த—மதியிடபஞ்
சாத்துவிக வேளை தனிற்றோன்றி யுய்யவுல
காத்துமா நந்தமுனி யாயுளத்தைக்—காத்தே
யவமகற்றி யில்லறத்தே யாண்டுசில வுற்றுத்
தவமுஞற்றி வீடுபெறச் சார்பாப்—பவமகற்று
முத்தாநந் தப்பேர் முனிவரர் தாள்சூடிச்
சத்தான நற்றுறவு சார்ந்துகுரு—பத்தியுடன்
சிந்தித்தல் கேட்ட றெளிதனிட்டை கூடலாற்
பந்தித்த மூலவிருள் பாற்றிமிக—வந்தித்துத்

தாணுக் கரமணிபோற் றத்துவநற் சங்காற்கண்
டானுத வின்பத்து ளாழ்ந்துநிதம்—வானம்போன்
மெய்நித்தா நித்த விவேகந் திருப்போரூ
ரையன் சிதம்பரானு ரங்காதி—துய்யவிளக்
காத்துமா நந்த மருளியுப சாந்திக்கு
மாத்திரை யன்மொழிக்கு மாய்ந்துநல்ல—சாத்துவீ
கற்பிலக்க ணத்துக்குங் கண்டுரைமெய் யன்பருக்குச்
சிற்பொருளைச் சாலவுப தேசித்துப்—பிற்கொல்ல
மாயிரத்து நூற்றிருப தாண்டுதிரு மேனியை
மேயவெண்பத் தாறதனில் விட்டுமகா—நேயமுள
வன்னையனை யானம்பை யாத்துமா நந்தகுரு
தன்னுருவ மாஞ்சிவர் தானேயாய்—மன்னிய
தெந்தநா ளென்றே யெமைவினவிற் கூறுதுநற்
கந்தமலர் தேன்றுளிக்குங் காலமெனச்-சிந்தனஞ்செய்
பார்த்திவவை காசியிரு பானுன் கசுவினிநாள்
போர்த்தபிற்பக் கத்தே புதனிரவி—லார்த்தமணி
தொல்லைமுன் றின்மேடஞ் சோபனஞ்சேர் கௌலவம்
புல்லுந் துவாதசிப் போது.

கலிவெண்பா முற்றுப்பெற்றது.

சுபமஸ்து.

9-2



குறிப்பு.

| வரியெண். | பதம். | அருத்தம். |
|---|---|---|
| 5 | குரு— | குருவாரம். |
| 5 | முற்பக்கம்— | சுக்கிலபக்ஷம். |
| 5 | கௌலவம்— | கௌலவ கரணம். |
| 7 | கடிகை— | நாழிகை. |
| 8 | மிதுனம்— | ஜன்ம லக்கினம் மிதுனம். |
| 8 | எல்லோரை— | சூரிய ஓரை. |
| 8 | மதி இடபம்— | சந்திர லக்கினம் ரிஷபம். |
| 21 | உபசாந்தி— | உத்தாலகருபசாந்தி. |
| 22 | ஆத்திரேயன் மொழி | அத்திரி முனிவரின் புதல்வராகிய பகவான் தத்தாத்திரேயர் யது மகாராஜனுக்குத் தாமடைந்த(24) இருபத்து நான்கு குருவையருளிச் செய்த பாகவதத்தின் சிறு பகுதி. |
| 22 | சாத்துவீ— | பதிவிரதை (உத்தமி) |
| 23 | கற்பிலக்கணம்— | காசிகாண்டத்தின் சிறு பகுதி. |
| 30 | நற்கந்த மலர் தேன் துளிக்கும் காலம் | வசந்தகாலம். |
| 32 | பிற்பக்கம்— | கிருஷ்ணபக்ஷம். |
| 33 | மேடம்— | மேஷ லக்கினம். |
| 33 | சோபனம்— | சோபன யோகம். |

உ

சிவமயம்.

# முகவுரை.

அறம், பொருள், இன்பம், வீடென உயர்ந்தோரால் எடுத்துச் சொல்லப்பட்ட உறுதிப்பொருள் நான்கு:— அவற்றுள், இறுதிப் பொருளாகிய துக்க நிவிர்த்தி சுகப்பிராப்தி வடிவ வீடானது முற்பிறவிகளிலே பயனைக்கருதாது ஈஸ்வரார்ப்பணமாகத் தந்தம் வருணாச்சிரமத்துக்குசிதமாக அனுட்டித்து வந்த புண்ணிய புஞ்ச (கூட்ட) பரிபாகத்தால் விவேகாதி சாதன சம்பன்னராயிருக்கின்ற முமுக்ஷுக்களால் விரும்பப்படுகின்றது. அவ்வீட்டினை யடைதற்குச் சாதனம் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானமொன்றேயாம். அத்தகைய ஞானத்தைச் சுருதி, ஸ்மிருதி, புராணேதிகாசங்கள் உபதேசிக்கின்றன. இதிகாசமாவன, சிவரஹசியமும், பாரதமும், இராமாயணமுமாம். அவற்றுள், இராமாயணம் பூர்வபாகம், உத்தரபாகம் என இரண்டு பிரிவினையுடைத்து. பூர்வபாகமாயுள்ள இராமாயணமானது இராமபிரான் அவதார முதலியவைகளை உபதேசித்து ஜீவர்கள் மனத்திலுள்ள மல, விக்ஷேப தோஷங்களை நீக்குகின்றது. உத்தரபாகமாகிய இராமாயணம் மல, விக்ஷேப தோஷங்களற்ற முமுக்ஷுக்களுக்கு ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தை உபதேசிக்கின்றது. அவ்

வுத்தரபாகமாகிய இராமாயணம் முப்பத்திராயிரம் கிரந்தவடிவம். அதனைக் காஸ்மீர பண்டிதரென்னும் அபிநந்தன ஆசாரியாரவர்கள் ஆறுயிரங் கிரந்தவடிவாகத் திரட்டினார்கள். அதனை வீரை ௳ளவந்தார் என்னும் புலவர் பெருமானார் (2055) செய்யுள் வடிவமாகத் தமிழிலே மொழிபெயர்த்தருளினர்.

அதனுள் (43) கதைகள் உள, அவற்றுள், உத்தாலகர் கதையென்பதொன்று. அது (79) செய்யுளையுடையது. அவ்வெழுபத்தொன்பது செய்யுளுள் (7) செய்யுள் அக்கதையின் சாரமாயுள்ளவை. அவ்வேழு செய்யுளின் அருமை, பெருமையை நோக்கி அம்பாசமுத்திரம், ஸ்ரீ ஆத்துமானந்தாச்சிரமம் ஸ்ரீமத் ஆத்துமாநந்த சுவாமிகளவர்கள் அவற்றைத் திரட்டி ஒரு சிறு நூலாகச் செய்து "உத்தாலகருபசாந்தி" யென்று பெயரிட்டும், அவ்வேழு செய்யுளுள் முன்னைய நான்கும் ஒரு தொடராய் உத்தாலகரடைந்த சத்தாசாமானியத்தின் அநுபூதியையும், பின்னைய மூன்றும் ஒரு தொடராய் அச்சத்தா சாமானியத்தின் இலக்கணத்தையும் கூறுகின்றன வாகலின் முறையே அநுபூதியியல், இலக்கணவியல் என இயல்களை வகுத்தும், இந்நூலுக்குத் திருவருள் விளக்கத் தெளிவுரை

வென ஒருரையையியற்றியுமிருந்தார்கள். இந்நூல், அம்பா சமுத்திரம், திருவாளர். அரு. நடராஜ முதலியார் பொருளுதவியாலும், முயற்சியாலும், அச்சிடப்பட்டது. ஷ்டி முதலியார் செய்த நன்றி என்றென்றைக்கும் மறக்கற்பாலதன்று. இதனை அன்போடு பாராயணஞ்செய்து வருகின்றவர்களுக்கு உத்தாலகாடைந்த அநுபூதி அவசியமுண்டாகுமென நம்புகின்றேன்.

இங்ஙனம்.

நடேச சுவாமி,

ஈசானியமடம்,

திருவண்ணாமலை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

"உத்தாலகருபசாந்தி"

## வாழ்த்துவடிவ மங்கலம்.

தந்தி யானனத் தெந்தை யார்கழல்
புந்தி சேர்த்தனன் பந்த நீக்கவே.

---

## வணக்கவடிவ மங்கலம்.

பொன்னுல கத்தினிற் புவியி லந்தரத்
தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது
மன்னுசிற் சோதியே வடிவ மியாவுமாய்த்
துன்னுவ தப்பொருள் தொழுதி றைஞ்சுவாம்.

---

ஓம் ஸ்ரீகணேசாய நம: ஸ்ரீசிவாப்யாம் நம: ஸ்ரீகுருப்யோ நம:

# உத்தாலகருபசாந்தி.

---

## அநுபூதியியல்.

(பின்வரும் செய்யுளின் மூல சுலோக மொழி பெயர்ப்பு)

1, பின்னர் மநம், ஒளி, இருள், உறக்க, மயக்கமுத லிய நீங்கிய ஏதோ ஒரு நிலையை யடைந்து கணம் இளைப்பாறிற்று.

2, இளைப்பாறி விரைவில் விஸ்வவடிவமான அங்க சம்வித்தையடைந்தது; கரையாற்றடுக்கப்பட்ட குளத்துநீர் எதிரிடையாய்த் தன்னிடத்தைய டைந்ததுபோல,

*விஸ்வவடிவமான—அனைத்துருவமான.*

*அங்கசம்வித்தை—தன்வடிவ அறிவின் நிறைவை.*

*(அவதாரிகை)*

*உத்தாலக முனிவருக்கு ஞாஞேயமானதை அஞ்ஞான விசிட்ட, ஞானவிசிட்ட மநத்தின் சொரூப வியாபாரங்களை உணர்த்தும் வாயிலாகத் திருஷ்டாந்த முகமாக விளக்கிக் காட்டுதல்.*

க. அன்ன காலையி லிருள்சுடர் துயில்மயக்
கனைத்தையு மறுத்தோட்டி
மன்னு மோரவத் தைபையடைந் தொருகணம்
வருத்தமா றியதுள்ள
மின்ன நீர்ந்துட னேயனைத் துருவமா
மறிவையெய் தியதன்றே
தன்னெ டுங்கரை தடுக்கநின் றெதிர்த்துமுற்
றலநிறைந் திடுநீர்போல்.

(இதன் பதப்பொருள்.)

அன்ன காலையில்—உத்தாலகமுனிவர் தமக்கு வந்த இடையூறுகள் யாவற்றையும் நீக்கிய பின்னர்.

| | |
|---|---|
| இருள், சுடர், துயில், மயக்கு அனைத்தையும் அறுத்து ஓட்டி | தமசு, தேஜசு, நித்திரை, மோக முதலிய யாவற்றையு மின்றியதாகக் கெடுத்தொழித்தலாற், |
| மன்னும் ஓர் அவத்தையை | பொருந்துகின்ற ஒப்பற்ற நிருவிகற்ப சமாதியை. |

ஒரு கணம் அடைந்து— ஒரு கண காலமடைதலான்

உள்ளம் வருத்தம் ஆறியது—மநது விசிராந்தி யடைந்தது

| | |
|---|---|
| நீர் நெடும் கரை தடுக்க நின்று | குளத்துப்புனல்நெடிய கரையாற்றடுக்கப் பட்டபோது [அக்கரைக்கணடங்கி நின்று மதகு திறந்தபோது அதன் வழியாக நுழைந்து வாய்க்கால் வழியோடி] |

**தன் முற்றலம் நிறைந்திடுதல் போல்**

தனது முன்னிடத்துள்ள [நானா பேத முடைய ஒவ்வொரு] வயலாகாரத்தைத் [தனித்தனி] நிறைந் தடைதல் போல [அஞ்ஞான தசையில் அவ்வஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருந்த உத்தாலகாது மநம் அவ்வஞ்ஞானத்தின் கணடங்கிநின்று ஜாக்கிராவத்தையில் விடயம் எதிர்ப்படும்போது இந்திரிய வழியாக நுழைந்து முன்னிடத்துள்ள விடயபரியந்தஞ் சென்று நானா பேதமுடைய சத்தாதி ஒவ்வொரு விடயாகாரங்களைத் தனித்தனியடைந்தது]

**எதிர்த்து முற்றலம் நிறைந்திடுதல் போல்**

[அப்புனலே மழை முதலிய வற்றாலாகிய மிகு பெருக்கால் முன்னதற்கு] மாறாக [அக்கரையினை யுடைத்தழித்த காலத்தில் கரைத் தடையில்லாமையால்] இது மதகு இது வாய்க்கால், இது வயல், என்னும் பேதம் [ஒன்றுந் தோன்றாமன் மறையும் படி அவ்விடத்தை] வியாபித் தடைந்தாற் போல [நிருவிகற்ப சமாதியின் அப்பியாச பலத்தாலுதயமாகிய ஞானப்பிரகாச மகிமையால் அவ்வஞ்ஞானத்தின் மறைப்பு நீங்கிய உத்தாலக முனிவாது அம் மநம் நிராவரணமாயிருத்தலால் முன் இது தேகம் இஃது இந்திரியம், இது விடயம், எனத் தோற்றிய நானா நாமரூப பேதமொன்றுந் தோன்றாமன் மறையும் படி]

**அனைத்து உருவமாம் அறிவை**

அவ்வெல்லா நாமரூபங்களின் சொரூபமாயுள்ள சம்வித்தை

இன்னல் தீர்ந்து—[இச்செய்யுளின் முற் பகுதியிற் கூறிய நிருவிகற்ப சமாதியில்] இளைப்பாறி

உடனே எய்தியது—விரைவில் வியாபித்தடைந்தது.

நீர் நெடுங்கரை தடுக்க நின்று தன் முற்றலம் நிறைந்திடு தல் போல் எதிர்த்து முற்றலம் நிறைந்திடுதல் போல் எனக் கூட்டுக. ஓட்டி, அடைந்து. நின்று என்பன செயவெனெச்சத் திரிபுகள். அன்று, ஏ, அசை நிலைகள். (1)

மூல சுலோக மொழி பெயர்ப்பு.

3. நெடுங்கால சிந்தனைவயத்தாலும், தனது ஞாநாநுபூதியினாலும், பொன்னானது சிலம்பின்றன்மையை யடைந்தது போல மனமானது சின்மய வியல்பை யடைந்தது

4. அதன் பின் சித்தாகிய தத்துவத்தையடைந்த மநமானது மநவியல்பை விட்டுக் குடத்திலுள்ள சேறு போல விரைவில் அன்னியமே (சித்தே) யாயிற்று.

(அ...கை) திருஷ்டாந்தத்தோடு. சித்தாகிய தத்துவத்தினடைவம், மநோ நாசமும், பொருளால் சத்தா சாமானியப்பேறுங் கூறுதல்,

உ. விஞ்சு நீள்பகற் பரிசயத் தாலுந்தன்
மெய்யறி வுணர்வாலும்
நெஞ்சு சின்மய மடைந்ததா லிரணிய
நிகழ்சிலம் பாமாபோல்

வஞ்ச வன்மநத் தன்மைபோய்ச் சிந்மய
மருவிய மநந்தீரச்
செஞ்செவ் வேவல்லை வேற்றுமை யானதாற்
சேற்றினுட் குடமென்ன.

இதன் பதப்பொருள்.

| | |
|---|---|
| இரணியம் | — பொன்னுனது |
| நிகழ் சிலம்பு ஆமாபோல் | நூபுரம் [நீண்டு வளைந்த உருவ] மாக விளங்குதல் போல |
| விஞ்சுநீள் பகல் பரிசயத்தாலும் | (பின்) மிகுதியாக அதிகநாட்செய்து வந்த அநுசந்தான வயத்தாலும் |
| தன் மெய்யறிவு உணர்வாலும் | தனது ஞாநாநுபூதியினுலும் |
| நெஞ்சு | —[உத்தாலகரது] உள்ளமானது |
| சிந்மயம் அடைந்தது | [1-வது கவியிற் கூறியவாறு திருசிய சம்பந்தத்தை விட்டு அதிற் பூரித்துள்ள சம்வித்து வடிவ] சிற்சொரூபத்தையடைந்தது |
| சிந்மயம் மருவிய மநம் | சித்தாகிய தத்துவத்தை யடைந்த மநம் |
| வஞ்சவன் மநத் தன்மை போய் | காவுடைக்கொடிய மநத்தினதுதுலத் தன்மை கெடுதலால் |

குடத்தினுள் சேறு என்ன } கும்பத்தினுள்ள பங்கம்போல [குடத்திலுள்ள சேறானது காலத்தால் ஜலம் வற்றியபோது சேற்றுருவத்தைவிட்டு ஒட்டுருவத்தையுறும் அதுபோல]

வல்லைதீரச் சேஞ்சேவ்வே } விரைவில் அத்தியந்த மிணக்கமுடன்.

வேற்றுமையானது— அன்னியமே (சித்தே)யாயிற்று.

எனவே இந்நூலின் ஐந்தாம் செய்யுளில் "இல்லாமை உறுபாவனையின் உறைப்பாலே தன்றன்னுள்ளம் கரைந்தே இன் அகல் சிற்சாமானிய வடிவாய் ஒன்றுயொன்று மதுவே சத்தா சாமானியம்" எனக் கூறியுள்ள இலக்கணமுடைய சத்தாசாமானிய சொரூபத்தை உத்தாலக முனிவரது மநம் அடைந்ததென்பதாயிற்று.

ஆல் அசைநிலைகள். போய் என்பது செயவெனெச்சத்திரிபு. 2°

மூல சுலோக மொழி பெயர்ப்பு.

5. அதன் பின் கடலானது அலையாதி வேற்றுமையை விட்டுச்சாமானிய ஜலரூபத்தை அடைந்தது போல சித்தானது த்ருசியத்தைவிட்டுத் தூயதாய் ஏகாகார பத்தியினை யுபாதியாக வுடையதாய்ச் சிற்சாமானியத்தை (எல்லாவற்றிலுமுள்ள சின்மாத்திர ரூபத்தை) யடைந்தது,

6. அதன்பின் சொரூப சாக்ஷாத்காரத்தை யடைந்த அவர் போகக் கூட்டத்தின் மநம் விட்டவராகி அதன்பின் உலகத்தைத் தாங்குகின்ற மகத்தான தூய சிதாகாய சொரூபமாயினர்.

(அ...கை) பிரதி விம்பத்திற்கு விம்பத்தோடுளதாகு மைக்கிய
மும், அதன் திருஷ்டாந்தமும், பொருளாசற் சத்தா
சாமான்யப்பேறும், வாசனுக்ஷயமும் கூறுதல்.

ரு. தங்கு காட்சிவிட் டமலமாய் ஞானத்தின்
சமமடைந் ததுபோதம்
பொங்கு வாரிதி திரைமுதற் பகிர்ச்சிபோய்ப்
புனல்சம மடைந்தென்ன
வெங்கு மோர்மதி யாயறி வுற்றவ
னீறில்போ கத்தெண்ண
மங்கி யாண்டண்டம் பரித்துயர்ந் தமலசின்
மயவிசும் புருவானன்.

இதன் பொருள்.

பொங்குவாருதி—பொங்குகின்ற கடலானது

| | |
|---|---|
| திரை முதற் பகிர்ச்சி போய் | அலை முதலிய நாமரூப பேதங்களை விடுதலால் |
| புனல் சமம் அடைந்தென்ன | சுத்த ஜல பாவத்தை யடைந்தாற் போல |
| போதம் | —பிரதி விம்ப சித்தானது |
| தங்கு காட்சி விட்டு | முன்னர்ப் பொருந்திய திருசிய சம்பந்தத்தைப் பற்றற விடுதலால |
| அமலமாய் | —தூயதாய் |

எங்கும் ஓர் மதியாய் | எவ்விடத்தும் ஏகாகார புத்தியினை யுபாதியாக வுடையதாய்

ஞானத்தின்சமம்— [விம்ப வடிவ] சிற்சாமானியத்து டன் (எல்லாவற்றிலுமுள்ள சின்மாத் திர ரூபத்துடன்)

அடைந்தது —ஐக்கியமாயிற்று எனவே இந்நூலின் ஆறும் செய்யுளின் முற்பாதியில் "காண்பன நீங்கி ஆம் சித்துத்தேற்ற மாய்ச் சாற்று முயற்கொம்பென நொய் தாய்ச் சித்தினிடை இறக்கின் அதுவே சத்தா சாமாநியமாம்" எனக் கூறிய இலக்கணமுடைய சத்தா சாமாநிய சொரூபத்தை உத்தாலக முனிவரது மனம் அடைந்தது என்பதாயிற்று.

அறிவு உற்றவன்—ஞாநாநுபூதியை யடைந்த உத்தா லக முனிவர்

போகத்து ஈறு இல் எண்ணம் மங்கி } போகசாதனங்களில் அளவிறந்துண் டாகின்ற வாசனைக ளனைத்தையும் [முயற்சியால்] கெடுத்தழித்தலால்

ஆண்டு —வாசனாக்ஷயமடைந்த அவ்விடத்தில்

அண்டம் 'ரித்து உயர்ந்த அமல | பிரபஞ்சத்திற்கு ஆதாரமாய் மகத் தாயுள்ள நின்மல

சிந்மய விசுப்புரு வானன் } சிதாகாய சொரூபமாயினர்

விட்டு, போய், மங்கி என்பன செயவெனெச்சத் திரிபுகள். மங்கி என்பதில் பிறவினை, வி, விகுதி குறைந்து நின்றது. உயர்ந்த என்பதிலுள்ள அகரம் தொகுத்தல் விகாரம்.

(மூல சுலோக மொழி பெயர்ப்பு)

7. அதன்பின் அவ்விடத்தில் காட்சியும், காணப்படு பொருளும் இல்லாததாய். எல்லையற்றதாய் உத்தம அனுபவ ரூபமாய் உள்ள ஆநந்த சோரூபத்தை அடைந்தார். அமிர்தக்கடலிற் குளித்தவர்போன்று.

8. சரீரத்தினின்றும் அதீதராயும், சிதாகாய சோரூபத்தையடைந்தவராயுமுள்ள அவர் இன்பக் கடல் என்னும் சத்தாசாமநிய வடிவ ஆத்மாவாயினர்.

சத்தாசாமாநியம்— சித்து அசித்து இரண்டிலுமுள்ள சத்தை

(அ...கை:) கூறிவந்த வாசனக்ஷயத்தை முடித்துப் பூரணாநந்த அநுபூதியும் அதன் திருஷ்டாந்தமும், ஜீவத்துவ விடுபாடும், சத்தா சாமாநியப் பேறுங்கூறுதல்.

சு. அவ்வி டத்தினிற் காண்பது காட்சியற்
றநந்தமா நல்லின்பச்

செவ்வி யாகந்த முற்றன னமுதமார்
தெண்கடற் குளித்தென்ன
மெய்வி டக்கழன் றதீதனு யொருதல
மேவினன் சதாநந்தப்
பௌவ மாயின னெங்கணு மொத்தசற்
பாவமே வடிவானன்.

இதன் பொருள்.

அவ்விடத்தினில் — அச்சிதாகாயத்தில்

காண்பது காக்ஷி அற்று } திருசிய தரிசனங்களின் வாசனை [முயற்சியின்றியும்] நசித்துப்போதலாற்

தெண் ஆர் அமுதக்கடல் } தெளிந்து நிறைந்த அமிர்த சமுத்திரத்தின் கண்

குளித்தென்ன — மூழ்கினவரைப்போன்று

அநந்தமாம் நல்வின்பம் செவ்வியாநந்தம் உற்றனன் } அபரிச்சின்ன நிரதிசயாநந்த உத்தம அநுபவியாயினர்

மெய்விடக் கழன்று அதீதனாய் } ஜீவத்தன்மையை நன்றாய்விட்டு [அதனை] க்கடந்தவராய்ச்

ஒரு தலம் மேவினன் — சிதாகாயத்தையடைந்தவராய்

சதானந்தப் பௌவமாயினன் } எப்பொழுதும் ஆநந்த சாகரராயுள்ள உத்தாலகமுனிவர்

| | |
|---|---|
| எங்கணும் ஒத்த சற்பாவமே வடிவானன் | எவ்விடத்துஞ் சமமாயிருக்கின்ற சத்தையே (சத்தாசாமாநியமே) சொரூபமாயினர். |

இந்நூலின் மூன்றாஞ் செய்யுளின் பிற்பாதியில் "அறிவற்றவன் என்பது முதல் சற்பாவமே வடிவானன்" என்னும் 4-வது செய்யுண் முடிவு பரியந்தமாயுள்ள ஒன்றரைச் செய்யுளால் இந்நூலின் 6-வது செய்யுளின் பிற்பாதியில் "புறன் துவக்கமாய்ப் பலவாய்த் தோற்று மிவையனைத்தும் உன் துவக்கமாய்ப் பலவாய்த் தோற்று மிவையனைத்தும் மாற்றி யகன்று மநம் நிற்கில் அதுவே சத்தா சாமானியமாகும் எனவும் பெரிய வாசிட்டத்தில் உபசமப்பிரகாணத்தில் 55-வது சர்க்கத்தில் 5-வது சுலோகத்தில் "சர்வ திருசியங்களையும் [விட்டுப்] பாரமார்த்திக ரூபத்தால் சத்தா சாமாநிய [த்தைக் கோசரிக்கும்] அனுபவ [மு]ம் எப்பொழுது சொரூப விளக்க [மேயாய்விடு]மோ அப்பொழுது [சிற்சாமாநிய சொரூபத்துக்குச்] சத்தா சாமாநியத்தன்மையடைவுறுகின்றது" எனவும் இந்நூலின் 7-வது செய்யுளின் முற்பாதியில் ஆமையுறுப்பென்ன எதிர் காண்பன உன்னு ஒன்றும் ஒழியாது தன்னுற் றன்பாலிறக்கு மெனின் அதுவே சத்தாசாமாநியம் எனவுங் கூறிய இலக்கணமுடைய சத்தா சாமாநிய சொரூபத்தை உத்தாலகமுனிவர் அடைந்தாரென்பது கூறப்பட்டது. அற்று என்பது செயவெனெச்சத்திரிபு. மேவினன் என்பது முற்றெச்சம். மெய் ஆகு பெயர், எகாரம் தேற்றப்பொருளில் வந்தது. பிரிநிலையெனினுமமையும்.

ஸ்ரீராமர் சொல்லலுற்ருர்.

(மூல சுலோக மொழிபெயர்ப்பு)

9. ஆத்ம ஞானமாகிய பகலையுண்டாக்கும் ஒப்பற்ற சூரியனே என்னுடைய சம்சயமாகிய துரும்புக்கு நெருப்பே அஞ்ஞானத்தாலாகிய வெப்பத்துக்குச் சந்திரனே எம்பெருமானே சத்தாசாமாநியம்யாது

ஸ்ரீவசிட்டர் சொல்லலுற்ருர்.

10. மிகவும் [திருசிய] அபாவபாவனையினுலே எப்பொழுது சித்தம் கெடுகின்றதோ அப்பொழுது சிற்சாமானிய சொரூபத்து (ஆத்மாவு) க்குச் சத்தாசாமானிய வியல்பு [அடைவுறுகின்றது]

(அ...கை.) மனோ நாசத்தாலும், விம்பப்பிரதிவிம்பங்களினைக்கியத்தினுலும், வாசனுக்ஷயத்தாலும், சித்திக்கின்ற சத்தாசாமானியத்தின் இலக்கணம் இரண்டரைச் செய்யுளாற் கூறத்தொடங்கி இச்செய்யுளில் மனோநாசத்தாலுளதாகுஞ் சத்தா சாமாநியத்தின் இலக்கணங் கூறுகின்ருர்.

ரு. என்ற வசிட்டன் றனைவள்ள லெதுசத்
தாசா மாநியமென்
றன்று வினவ வவனுறைப்பா னகல்சிற்
சாமா நியவடிவா

யொன்று மொன்று மில்லாமை யுறுபா
வனையி னுறைப்பாலே
தன்ற னுள்ளங் கரைந்தேகிச் சத்தா
சாமா நியமதுவே.

இதன் பொருள்.

என்ற வசிட்டனை. } இன்னண மருளிய ஸ்ரீ வசிட்ட பகவானை

வள்ளல் —ஸ்ரீ ராகவர்

சத்தாசாமாநியம் எது என்று } சத்தாசாமாநியம் யாது என்பதாக

அன்று வினவ —அப்போது கேட்க

அவன் உறைப்பான் } ஸ்ரீவசிட்ட பகவான் அருளுவதாவது.

இல்லாமை உறு பாவனையின் உறைப்பாலே } [திருசிய] அபாவத்தின் மிக அழுத்தமான பாவனையினால்.

தன்னுள்ளம் கரைந்து ஏகின் } யோகியின் மனம் நசித்துப்போமாயின்

அகல் சிற்சாமாநிய வடிவாய் } வியாபகமாகிய சிற்சாமாநிய சொரூபமாய்

ஒன்றாய் —ஏகமாய்ப்

ஒன்றும் அதுவே—பொருந்துகின்ற அதுவே
சத்தா சாமாநியம்—சத்தா சாமாநியமாம்.

தன் இரண்டும் சாரியைகள். அகலம் என்பது குறைந்து நின்றது. ஈற்று ஏகாரம் பிரிநிலை. (5)

(மூல சுலோக மொழி பெயர்ப்பு.)

11. திருசியாமிசம் விடுபட்ட சித்தானது அதி சொச்சமாய் ரூபமில்லாததுபோல எப்பொழுது ஆத்மாவின் கண் நன்குயோடுங்குகின்றதோ அப்பொழுது [சிற்சாமாநிய சொரூபத்துக்குச்] சத்தாசாமாநியத் தன்மை அடைவுறுகின்றது.

12. உள்வெளியோடு கூடிய வடிவமுள்ள அற்பமாகிய இவையனைத்தையும் நீக்கி எப்பொழுது சித்தானது நிற்குமோ அப்பொழுது [சிற்சாமாநிய சொரூபத்துக்குச்] சத்தாசாமாநியத்தன்மை அடைவுறுகின்றது.

(அ...கை.) இச்செய்யுளின் முற்பாதியில் விம்பப்பிரதிவிம்பங்களினைக்கியத் தாலுளதாகுஞ் சத்தாசாமாநியத்தின் இலக்கணங் கூறுகின்றார்.

சூ. தேற்ற மாங்காண் பனநீங்கிச் சித்தி
னிடையே சித்திறக்கிற்
சாற்று முயற்கொம் பெனவொய்தாஞ் சத்தா
சாமா நியமதுவே

தோற்றம் புறனுள் ளாய்ப்பலவாய்த் துவக்க
மாகு மிவையனைத்து
மாற்றி யகன்று மநநிற்கி லதுசத்
தாசா மாநியமே.

இதன் பொருள்.

காண்பன நீங்கி ஆம் சித்து } [திருசிய அபாவத்தின் மிகஅழுத்தமான பாவனையினால் மாதுலயித்தபோது சம்பந்தத்திற்குட்பட்ட சித்தமின்மையின்] திருசிய சம்பந்தம் விடுபட்ட சித்த விருத்திப் பிரதிவிம்பசைதன்னியம்

தேற்றம் [ஆய்] —மிக விளக்கமாய்

சாற்றமுயற் கோம்பென நோய்து [ஆய்] } அசத்தெனச் சொல்லப்பட்ட முயற்கோடு போல உருவமின்றியதாய்

சித்தினிடை இறக்கில் } விம்ப சித்தின்கண் ஐக்கியமுறின்

அதுவே —சிற்சாமாநியமே

சத்தா சாமாநியம் ஆம்—சத்தாசாமாநியமாம்.

(அ...கை.) இச்செய்யுளின் பிற்பாதியாலும், வருஞ்செய்யுளின் முற்பாதியாலும் வாசஞுகூயத்தாலுளதாகுஞ் சத்தா சாமாநியத்தின் இலக்கணங்கூறுகின்றார்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| புறன் துவக்கமாய்ப் பலவாய்த் தோற்றும் இவையனைத்தும் | வெளியிடத்துப் பரிச்சின்னமாய் நாநாவாய்க் காணப்படுகின்ற [ஆகாயாதிப் பிரபஞ்ச வாசனையாகிய] இவ்வெல்லாவற்றையும் |
| உள் [துவக்கம் ஆய்ப் பலவாய்த் தோற்றும் | உள்ளிடத்துப் பரிச்சின்னமாய் நாநாலாய்க் காணப்படுகின்ற |
| இவை அனைத்தும் | [அகங்காராதிப் பிரபஞ்ச வாசனையாகிய] இவ்வெல்லாவற்றையும் |
| மாற்றி அகன்று | [திருசிய அபாவத்தின் மிக அழுத்தமான பாவனையால்] நன்றாய்விட்டு |
| மநம் நிற்கில் | —மனமானது நிலைபெறின் |
| அதுவே | —சிற்சாமாநியமே |
| சத்தாசாமாநியம் ஆகும் | சத்தா சாமாநியமாம். |

ஆம் என்பவற்றை நீங்கி ஆம், சத்தாசாமாநியம் ஆம் எனக் கூட்டி அவ்விடங்களில் தேற்றம் ஆய் நொய்து ஆய் என ஆக்கச்சொல் வருவித்து முடித்துக்கொள்க. உள்ளாய் என்பதிலுள்ள ஆக்கச்சொல்லைத் துவக்கம் என்பதனோடும், ஆகும் என்பதைச் சத்தா சாமாநியத்தோடும், ஈற்று ஏகாரத்தை அதுவென்பதனோடும், துவக்கமாய்ப் பலவாய்த் தோற்றுமிவை

யனைத்தும் என்பவற்றைப் புறன் உள் இரண்டோடு தனித்தனி யாகவும் கூட்டி முடித்துக்கொள்க.

துவக்கு =தோல் அற்பார்த்தத்தில்வந்தது. அம்—சாரியை. 6.

(மூல சுலோக மொழிபெயர்ப்பு.)

13. ஆமையுறுப்புக்கள் போலத் திருசியங்கள் (யோகியால்) பாவிக்கப்படாதனவாகியே தானாகவே தன்னிடத்தில் எப்பொழுது ஒடுங்கி விடுகின்றனவோ அப்பொழுது [சிற்சாமாந்ய சொரூபத்துக்குச்]சத்தா சாமாநியத் தன்மை அடைவுறுகின்றது.

14 உடல்சேர் முத்தர்உடலிலதாமுத்தர் இருவர்க்கும் இந்த மகத்தான திருஷ்டியானது எப்பொழுதுமே அடைவுறுகின்றது [இது] துரியாதீதபதமென்னும் பெயருடையது.

(அ...கை.) இதுவுமது.

எ. உன்னு வெதிர்காண் பனவொன்று மொழியா
தியாமை யுறுப்பென்னத்
தன்னுற் றன்பா லிறக்குமெனிற் சத்தா
சாமா நியமதுவே
முன்னு முடல்சேர் முத்தருட லிலதா
முத்த ரிருவர்க்கு
மென்னா ளினுஞ்சேர் பெருங்கண்ணீ திதன்பேர்
துரியா தீதபதம்.

இதன் பொருள்,

ஆமையுருப்பு —ஆமை அவயவங்கள்

[உன்னு] } [நித்திரைப்போதில்]பாவிக்கப்படாதனவேயாய்

தன்னால் } தானாகவே = முயற்சியின்றியே [ஒடுக்குதல் வடிவயத்தினபேக்ஷையில்லாமலே ]

ஆமைதன்பால் —அவ்வாமையுடலில்

ஒன்றும் ஒழியாது - ஒன்றும் சேடியாமல்

என்ன —[ஒடுங்குதல்] போல

எதிர்காண்பன — திருசியங்கள்

உன்னு } [சித்தம் உண்முகமா யிருத்தலால் யோகிபால் சகஜநிலையில்] பாவிக்கப்படாதனவேயாய்

தன்னால் } தானாகவே = திருசியாபாவ பாவனுரூப யத்தின விசேடமின்றியே

தன்பால் —தன்னிடத்து

ஒன்றும் ஒழியாது—அற்பமும் சேடியாமல்

இறக்குமேனில் —நசித்து விடுமாயின்

அதுவே —சிற்சாமாநியமே

சத்தாசாமாநியம் —சத்தாசாமாநியமாம்

(அ...கை.) சத்தா சாமாநிய சொரூப திருஷ்டியானது நம்ம ஞேருள் யாவர்க்கு எப்போதும் உளது? இதன் பரியாய நாமம் யாது? எனச்சங்கைவரக் கூறுகின்ருர்.

இதன் பொருள்.

நாம் முன் } நம்மனோர் யாவரும் தியானித்[துத் துதித்துப் பூஜித்து வணங்கு] தற்குரிய [மகிமை வாய்ந்த]

உடல் சேர் முத்தர் உடல் இலது ஆம் முத்தர் } ஜீவன் முத்தர், விதேக முத்தர்

இருவர்க்கும் —இருவருக்கும்

ஈது —இச்சத்தாசாமாநிய சொரூபமானது

எந்நாளினுஞ் சேர் பெருங்கண் } எப்போதும் அடைவுற்ற மகத்தான திருஷ்டி (ஞாநாவஸ்தை) யாம்

துரியாதீதபதம். —துரியாதீதபதமென்பது

இதன் பேர் } இச்சத்தா சாமாநிய சொரூப திருஷ்டிக்குப் பரியாயப்பெயராம்.

இருவர்க்கும் ஈது எந்நாளினுஞ் சேர்பெருங்கண் என்றதால் அவ்விருவரும் ஒத்தநிலையின ரென்பது நன்குணரப்படும். உன்னு, ஒன்றும் ஒழியாது, தன்னுல், தன்பால் என்பன உவமையிலும் சென்றியைந்தன. உன்னு என்பது செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது. முன், முதனிலைத் தொழிற்பெயர் அது வாக்குக்காய வியாபாரங்கட்குபலக்ஷணம். முன்னுதல் = நினைத்தல்.

(கூறிய இரண்டியலின் திரண்ட பொருள்)

இங்குக் கூறிய 7-கவிகளுள் முன்னைய நான்கும் ஒருதொடர், பின்னைய மூன்றும் ஒரு தொடர் அவற்றுள் முன்னைய தொடரில் உத்தாலக முனிவர் சத்தா சாமாநிய பரியந்தம் ஞாந பூமிகளை அப்பியசித்தடைந்த முறை கூறப்பட்டுளது. பின்னைய தொடரில் அச்சத்தா சாமாநியத்தி னிலக்கணங் கூறப்பட்டுளது. அதுவும் மநோநாச விம்பப்பிரதிவிம்ப வைக்கிய வாசனுக்ஷயங் களைக்கூறும் வாயிலாகக் கூறப்பட்டுளது.

அவ்விலக்கண முறை எங்ஙனமெனின், பின்னைய தொடராகிய ஐந்தாவது செய்யுளில் ' இல்லாமைஉறு பாவனையின் உறைப்பாலே தன்றனுள்ளங் கரைந்தே கின் அகல் சிற்சாமாநிய வடிவாய ஒன்றாய் ஒன்று மதுவே சத்தாசாமாநியம்" என்னும் வாக்கியத்தால் மநோநாசங்கூறும் வாயிலாகவும், ஆறுவது செய்யுளின் முற்பாதியில் "காண்பன நீங்கி ஆம் சித்துத் தேற்ற மாய்ச் சாற்று முயற்கொம்பென நொய்தாய்ச் சித்தி னிடை இறக்கின் அதுவே சத்தாசாமாநியமாம்" என் னும் வாக்கியத்தால் விம்பப்பிரதிவிம்பங்களினைக்கியங் கூறும் வாயிலாகவும், பிற்பாதியில் ' புறன் துவக்க மாய்ப் பலவாய்த் தோற்றும் இவையனைத்தும் உள் துவக்கமாய்ப் பலவாய்த் தோற்று மிவையனைத்தும் மாற்றியகன்று மநம்நிற்கில் அதுவே சத்தா சாமாநிய மாகும்" என்னும் வாக்கியத்தாலும், ஏழாவது செய்யு ளின் முற்பாதியில் "ஆமை யுறுப்பென்ன எதிர் காண்

பன உன்ஞ தன்ஞல் தன்பால் ஒன்றும் ஒழியாது இறக்குமெனின் அதுவே சத்தாசாமாநியம்'' என்னும வாக்கியத்தாலும், வாசஞுக்ஷயம் கூறும் வாயிலாகவும் சத்தா சாமாநிய இலக்கணங் கூறப்பட்டிருக்கின்றது.

இனி, உத்தாலக முநிவருக்குளதாகிய அநுபூதி முறை எங்ஙனமெனின் 1-வது செய்யுளில் "அனேத் துருவமாம் அறிவை யெய்தியது'' என்னும் வாக்கியத் தால் உத்தாலக முநிவருக்கு ஞானோதயமானதும். 2-வது செய்யுளில் "விஞ்சு நீள் பகல் பரிசயத்தாலும் தன் மெய்பறிவுணர்வாலும் நெஞ்சு சிந்மயமடைந்தது சிந்மயம் மருவிய மநம் வஞ்ச வன்மநத்தன்மைபோய்க் குடத்தினுட் சேறு என்ன வல்லைதீரச் செஞ்செவ்வே வேற்றுமையானது.'' என்னும் இவ்வளவு வாக்கியங்க ளால் "அனேத்துருவமா மறிவையெய்திய'' அம்மனத் திற்கு 1-வது செய்யுளிற் கூறிய திருசிய விடுபாடு காரணமாகச் சிற்சொரூபத்தினடைவும் தனது உருவ நாசமும் பொருளாற் சத்தாசாமாநியப்பேறும், 3-வது செய்யுளின் முற்பாதியில் "போதம் தங்கு காட்சிவிட்டு அமலமாய்'' "எங்கும் ஓர் மதியாய் ஞானத்தின் சமம் அடைந்தது' என்னும் இவ்வளவு வாக்கியத்தால் பிரதி விம்ப சித்திற்குத் திருசிய விடுபாடு காரணமாக விம்ப வடிவ சிற்சாமாநியத்தின் கண் ஐக்கியமும் பொருளாற் சத்தாசாமாநியப் பேறும், பிறபாதியில் "அறிவுற்ற வன் போகத்து ஈறு இல் எண்ணம் மங்கி ஆண்டு அண் டம் பரித்து உயர்ந்த அமல சிந்மய விசுப்புருவா

ஞன்'' என்னும் இவ்வளவு வாக்கியத்தாலும், 4-வது செய்யுளில் ''அவ்விடத்தினில் காண்பது காக்ஷியற்று அநந்தமாம் நல்லின்பச் செவ்வியாநந்தம் உற்றனன் மெய்விடக்கழன்று அதீதனுய் ஒரு தலம் மேவினன் சதாநந்தப் பெளவமாயினன் எங்கணு மொத்த சற் பாவமே வடிவானுன்'' என்னும் இவ்வளவு வாக்கியங் களாலும் திருசிய விடுபாடுகாரணமாக வாசனுக்ஷயமும் அதுகாரணமாக அபரிச்சின்ன ஆநந்த உத்தமஅநுபூதி யும், ஜீவத்துவ விடுபாடும், ஆநந்தக் கடல் வடிவமான சத்தா சாமாநியப்பேறும் கூறப்பட்டுள்ளன.

தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானு
மந்தமிலா வின்பநமக் காவானு—மெந்தமுயிர்
தானுகு வானுஞ் சானுகு வானு மருட்
கோனுகு வானுங் குரு.

உத்தாலகருபசாந்தியும்,

திருவருள் விளக்கத் தெளிவுரையும்,

முற்றுப்பெற்றன.

---

சுபமஸ்து.

---

உ

இந்நூலாசிரியர்,

## ஸ்ரீ ஆத்துமாநந்த சுவாமிகள்

**பரிபூரணமான நாள்.**

---

நேரிசை வெண்பா.

அன்னையனை யானம்பை யாத்துமா நந்தகுரு
தன்னுருவ மாஞ்சிவந் தானேயாய் —மன்னியநாள்
பார்த்திவவை காசியிரு பானுன் கசுவினிமா
லார்த்த துவாதசிமே டம்.

இவை,

திருவருணை, ஈசானியமடம்,

ஸ்ரீமது. நடேச சுவாமிகள் இயற்றியது.

---

---

குறிப்பு:- மால் = புதன்கிழமை
மேடம் = மேஷலக்கினம்.

உ

சிவமயம்.

# ஸ்ரீலஸ்ரீ. ஆத்துமாநந்த சுவாமிகள் வரலாறு.

## அஷ்டகம்.

### வெண்பா.

அடியார்குழாத்துளொருவர் பாடியது.

ஆயிரத்து முப்பத்தைந் தாண்டிற்சித் தாத்திரியிற்
றேய்மார் கழியிற் றுவாதசியி—லேயிருபான்
மூன்றுகுரு ரோகிணியின் முற்பக்கங் கௌலவந்
தோன்றிய யோகஞ் சுபம். (க)

கதிரோன் மறையக் கடிகையைந்தே வீசம்
வதிமிதுன மெல்லோரை வாய்த்த—மதியிடபஞ்
சாத்துவிக வேளை தனிற்றோன்றி யுய்யவுல
காத்துமா நந்தமுனி யாய். (உ)

அவமகற்றி யில்லறத்தே யாண்டுசில வுற்றுத்
தவமுஞற்றி வீடுபெறச் சார்பாப்—பவமகற்று
முத்தாநந் தப்பேர் முனிவரர் தாள்சூடிச்
சத்தான நற்றுறவு சார்ந்து. (ங)

சிந்தித்தல் கேட்ட றெளிதனிட்டை கூடலாற்
பந்தித்த மூலவிருள் பாற்றிமிக—வந்தித்துத்
தானுக் கரமணிபோற் றத்துவநற் சங்கரற்கண்
டானந்த வின்பத்து ளாழ்ந்து. (ச)

மெய்நித்தா நித்த விவேகந் திருப்பொரு
ளையன் சிதம்பரனு நந்தாதி— துய்யவிளக்
காத்துமா நந்த மருளியுப சாந்திக்கு
மாத்திரை யன்மொழிக்கு மாய்ந்து. (ரு)

கற்பிலக்க ணத்துக்குங் கண்டுரைமெய் யன்பருக்குச்
சிற்பொருளைச் சாலவுப தேசித்துப்—பிற்கொல்ல
மாயிரத்து நூற்றிருப தாண்டுதிரு மேனியை
மேயவெண்பத் தாறதனில் விட்டு. (சு)

அன்னையனை யானம்பை யாத்துமா நந்தகுரு
தன்னுருவ மாஞ்சிவந் தானேயாய்—மன்னிய
தெந்தநா ளென்றே யெமைவினவிற் கூறுதுநற்
கந்தமலர் தேன்றுளிக்குங் கால். (எ)

பார்த்திவவை காசியிரு பானுன் கசுவினிநாள்
போர்த்தபிற்பக் கத்தே புதனிரவி—லார்த்தமணி
தொல்லைமூன் றின்மேடஞ் சோபனஞ்சேர் கௌலவம்
புல்லுந் துவாதசிப் போது. (அ)

அஷ்டகம் முற்றுப்பெற்றது.

சுபமஸ்து.

---

# பிழை திருத்தம் அட்டவணை.

| | பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| முகவுரை | 1 | 7 | ஈஸ்வரார்ப்பண | ஈசுவரார்ப்பண |
| | | 10 | யிருங்கின்ற | யிருக்கின்ற |
| | 2 | 3 | ஆசாரியாரவர்கள் | ஆசாரியரவர்கள் |
| | | 4 | வீரைளவந்தார் | வீரை ஆளவந்தார் |
| நூல். | 1 | 8 | விஸ்வ | விசுவ |
| | | 12 | விஸ்வ | விசுவ |
| | 2 | 4 | தைபை (பை) | தையை |
| | 7 | 14 | வாருதி | வாரிதி |
| | | 21 | விடுதலால | விடுதலால் |
| | 9 | 2 | விசுப்புரு | விசும்புரு |
| | 10 | 10 | காக்ஷி | காட்சி |
| | 12 | 21 | னுறைப்பா | னுரைப்பா |
| | 13 | 4 | தேகிச் | தேகிற் |
| | | 14 | உறைப்பான் | உரைப்பான் |
| | 18 | 3 | ஆமையுருப்பு | ஆமையுறுப்பு |
| | 22 | 3 | காக்ஷி | காட்சி |
| | 23 | 1 | இந்நூலாசிரியர் | இந்நூலுரையாசிரி [யர் |
| | | 9 | இவை | இது |
| முன் பக்கம். | | 17 | பெற்றது | பெற்றன |

